# அத்வைத ஆசான்
# ஸ்ரீ ஆதிசங்கரர்.





# அத்வைத ஆசான்

# ஸ்ரீ ஆதிசங்கரர்.

எழுதியவர்

டி.சூரியநாராயணன்

பிரசுரம்

ஸ்ரீ பூக்குளங்கர பகவதி ஸஹாயம்
ஸ்ரீ குருவாயூரப்பன் ஸஹாயம்



*ச்ருதிஸ்ம்ருதி புராணானாம் ஆலயம் கருணாலயம்*
*நமாமி பகவத்பாத சங்கரம் லோக சங்கரம்*

## முன்னுரை

**வேதபாரதி திரு ஆர்.வெங்கட்ராமன்** அவர்கள் ஒருநாள் என்னைச் சந்தித்து எல்லாம் வல்ல பரமேஸ்வரரின் திருவருளாலும் **பூஜ்யஸ்ரீ பரமானந்த பாரதி ஸ்வாமிகளின்** வழிகாட்டுதலில் வேதபாரதியின் மூலமாக 2014 பிப்ரவரி மாதம் சென்னையில் நடக்கவுள்ள ஏகதின அதிருத்ர மஹா யக்ஞத்தின் போது ஸ்ரீ ஆதி சங்கரரின் வாழ்க்கையைக் குறித்து ஒரு சிறிய புத்தகம் வெளியிட உள்ளதாகவும் அதற்காக ஸ்ரீசங்கரரின் வாழ்க்கை வரலாற்றை சுருக்கமாக எழுதி

கொடுக்கவேண்டும் என்று என்னைக் கேட்டுக்கொண்டார். எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. ஸ்ரீஆதி சங்கர பகவத் பாதர் வாழ்க்கை வரலாற்றை நான் எழுதுவதா ? அப்படி ஒரு புத்தகம் எழுத எனக்கு தகுதி இருக்கிறதா ? என்ற கேள்வி என்னுள் எழுந்தது. ஆனால் **'தெய்வம் மனுஷ்ய ரூபேண'** என்று சொல்லுவதுபோல் நான் தினமும் பூஜை செய்யும் அந்த **ஸ்ரீகுருவாயூரப்பனே** வேதபாரதி திரு.ஆர்.வெங்கட்ராமன் அவர்களின் மூலமாக என்னை ஆக்ஞையிட்டது போல் இருந்தது. ஸ்ரீ ஆதி சங்கரர் அவர்களின் பஜகோவிந்தத்தையும் அவர் எழுதிய ஸ்தோத்ரங்களையும் நான் பாராயணம் செய்வதுண்டு. அவர்மீது எனக்கு ஆழ்ந்த பக்தியும் உண்டு. அதனால் எழுத சம்மதித்தேன். எத்தனையோ மகான்கள் பண்டிதர்கள் போன்றோர் ஸ்ரீஆதி சங்கரரைப் பற்றி பல புத்தகங்கள் எழுதியுள்ளார்கள். நான் இப்போது எழுதுவது சற்று வித்தியாசமாகவும் புதுமையாகவும் இருக்கவேண்டும் என்று நினைத்தேன். என்னுடைய விருப்பத்தை இங்கு வெளிப்படுத்தியுள்ளேன். இது என்னுடைய முதல் முயற்சி. இதை ஸ்ரீஆதி சங்கர பகவத் பாதர் ப்பாதங்களில் சமப்பிக்கிறேன்.

*டி. சூரியநாராயணன்*

## ஓம் நமசிவாய

**யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத /**
**அப்யுத்தானமதர்மஸ்ய தாத்மானம் ஸ்ருஜாம்யஹம் //**
**(கீதை : 4-7)**

**பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம் /**
**தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே //**
**(கீதை : 4-8)**

**'அர்ஜுனா'!** *எப்பொழுதெல்லாம் தர்மம் நெளிந்து அதர்மம் தலைதூக்குமோ அப்போதெல்லாம் நான் என்னைப் பிறப்பித்துக்கொண்டு நல்லாரைக் காக்கவும் கெட்டவர்களை அழிக்கவும் தர்மத்தை நிலைநாட்டவும் யுகம்தோறும் அவதரிப்பேன்'* என்கிறார் பகவான்.

பரம்பொருள் ஒன்றே பிரம்மா விஷ்ணு சிவன் என்று மும்மூர்த்திகளாக இருந்து இவ்வுலகில் படைத்தல் காத்தல் அழித்தல் என்ற மூன்று காரியங்களையும் செய்கிறார்கள். இவர்களில் **'பிரம்மா'** அவதாரம் எடுப்பதில்லை. பகவான் மஹாவிஷ்ணு உலக க்ஷேமத்திற்காக பல பல அவதாரங்களை எடுத்துள்ளார். ஸ்ரீமத் பாகவதத்தில் முதல் ஸ்கந்தத்தில் 3வது அத்தியாயத்தில் ஸ்லோகங்கள் 6 முதல் 25 வரையிலும் பகவான் ஸ்ரீமஹாவிஷ்ணு எடுத்த பல அவதாரங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. சிவன் ஒவ்வொரு யுகத்திலும் அவதாரம் எடுப்பதில்லை.

சமார் 2500 வருடங்களுக்கு முன் உலகம்பூராவும் ஞானமார்க்கம் குறைந்து வேதங்களுக்கு குந்தகம்

ஏற்பட்டுவிட்டது. இதைப் பார்த்த நாரதர் மிகவும் கவலைகொண்டு தம்முடைய தந்தையான பிரம்மாவிடம் போய் முறையிடுகிறார். பிரம்மா நாரதரையும் தேவர்களையும் அழைத்துக்கொண்டு கைலாயத்திற்குச் சென்று ஞான ஸ்வாமியான பரமேச்வரனிடம் முறையிட்டு பூலோக மானிடர்களுக்கு நல்லது அருள்பாலிக்கும்படி வேண்டுகிறார். இதை முதலிலேயே அறிந்த பரமேச்வரன் 'நானே நான்கு சிஷ்யர்களுடன் பூலோகத்தில் மனுஷ ஜென்மாவை மேற்கொண்டு வேண்டியததைச் செய்வேன்' என்கிறார். சிவனுடைய அங்கமான **'ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி'** பூலோகத்தில் பிறவி எடுக்க இசைகிறார். தேவர்கள் உள்ளம் குளிர்கிறார்கள்.

உலகத்தில் ஞான மார்க்கம் குன்றியிருந்தாலும் பாரத தேசத்தின் கேரள தேச மக்கள் கூடியமட்டும் வைதீக அனுஷ்டானங்களை விடாமல் கடைபிப்டித்து வந்தார்கள். அந்த கேரள தேசத்தில் **'காலடி'** என்கிற கிராமத்தில் **'சிவகுரு'** என்ற அந்தணரும் அவருடைய மனைவி **'ஆர்யாம்பாள்'** என்பவரும் எப்போதும் சிவபூஜை செய்வதிலும் தர்ம காரியங்கள் செய்வதிலும் தங்களை ஈடுபடுத்திக்கொண்டு வாழ்ந்து வந்தார்கள். ஆனால் அவர்களுக்கு குழந்தை இல்லையே என்கிற குறை இருந்தது. இருந்தாலும் தொடர்ந்து தங்களுடைய கோரிக்கையை பரமசிவனிடம் வைத்துக்கொண்டே இருந்தார்கள்.

ஒரு நாள் ஒரு **'யதி'** சிவகுருவின் கனவில் வந்து **'ரிஷபாசலம்'** சென்று சிவனைத் துதிக்கவும்'

என்று கூறி மறைந்துவிட்டார். சிவகுருவும் ஆர்யாம்பாளும் காலடியிலிருந்து 35 மைல் துாரம் உள்ள 'ரிஷபாசலம்' 'விருஷாசலம்' 'சிவபுரம்' என்ற பல பெயர்களில் அழைக்கப்படும் இப்போதுள்ள **'திருச்சூர்'** வந்து அங்குள்ள வடக்குநாதன் என்ற நாமம் கொண்ட சிவ க்ஷேத்திரத்தில் 48 நாட்கள் விரதம் இருந்து சிவனைத் தொழுதுவந்தார்கள். அவர்களுடைய சிறந்த உண்மையான பக்தியைக் கண்டு வடக்கு நாதன் ஒரு நாள் சிவகுருவின் கனவில் தோன்றி 'நானே உங்களுக்கு புத்திரனாக பிறப்பேன்' என்று கூறி மறைகிறார். சிவகுருவும் ஆர்யாம்பாளும் மிகுந்த ஸந்தோஷத்துடன் காலடி திரும்பினார்கள். ஊர் திரும்பிய தம்பதிகள் ஸமாராதனை நடத்தி ஆர்யாம்பாள் ஸமாராதனை பிரஸாதத்தை உண்டார். அக்கணமே தக்ஷிணாமூர்த்தி ஆர்யாம்பாள் வயிற்றில் ஜோதி ரூபத்தில் பிரவேசித்தார். பத்துமாதம் கழிந்ததும் வைகாசி மாதம் சுக்லபட்ச பஞ்சமி திதி ஞாயிறு அபிஜித் முஹூர்த்தம் கடக லக்னம் புனர்வஸு நட்க்ஷத்திரம் மதியம் உச்சி வெய்யிலில் பகவான் குழந்தையாக அவதாரம் எடுத்தார். ஸப்த கன்னிகைகள் வந்து ஆசீர்வதிக்கிறார்கள். காலடி முழுவதும் சுப சகுணங்கள் தோன்றின. ஊர் மக்கள் மகிழ்ச்சியில் திளைத்தார்கள்.

குழந்தை பிறந்த பன்னிரெண்டாவது நாள் சிவகுரு குழந்தையைத் தன் மடியில் வைத்துக்கொண்டு **'சங்கரன்'** என்று திருநாமம் சூட்டினார்.

ஒரு வயது ஆனதும் குழந்தை சங்கரன் பேச ஆரம்பித்துவிட்டான். மூன்றாவது வயதில் சங்கரனின் தந்தை கேரளத்து ஸம்ப்ரதாயப்படி குழந்தைக்கு நல்ல முகூர்த்தத்தில் '**சௌளம்**' ( குடுமிக் கல்யாணம் ) செய்து அக்ஷராப்யாஸமும் செய்துவைத்தார். எல்லாவிதக் கல்விகளும் சங்கரனை நாடிவந்தன. இந்த வயதில் ஒரு தெய்வீக ஸம்பவம் நடந்தது. காலடியில் ஒரு அம்பாள் கோயில் இருக்கிறது. ஸரஸ்வதியே **காத்யாயனி** என்ற பெயரில் அங்கு குடிகொண்டுள்ளாள். சங்கரனின் தந்தை சிவகுரு அந்த கோவிலில் தினமும் அம்பாளுக்கு பூஜைகள் செய்து வந்தார். தினமும் அம்பாளுக்கு பால் நிவேதனம் செய்து அந்த ப்ரஸாதத்தை குழந்தை சங்கரனுக்குக் கொடுப்பது வழக்கம். ஒரு நாள் சிவகுரு அவஸரமாக வெளியூர் செல்லவேண்டியிருந்ததால் குழந்தை சங்கரனிடம் அம்பாளுக்கு பால் நிவேதனம் செய்யச் சொன்னார். குழந்தையும் கோயிலுக்குச் சென்று ஒரு கிண்ணத்தில் பாலை வைத்து அம்பாளுக்கு மந்திரங்கள் சொல்லி நிவேதனம் செய்தான். அம்பாள் வந்து பாலை அருந்துவாள் என்று குழந்தை காத்திருந்தான். ஆனால் அம்பாள் ப்ரத்யக்ஷம் ஆகாததால் குழந்தை அழ ஆரம்பித்துவிட்டான். உடனே அம்பாள் ப்ரத்யக்ஷமாகி கிண்ணத்தில் இருந்த பால் முழுவதையும் குடித்துவிட்டாள். இதைக் கண்ட குழந்தை தனக்கு ப்ரஸாதமாக பாலை மிச்சம் வைக்கவில்லையே என்று மீண்டும் அழ ஆரம்பித்துவிட்டான். குழந்தையின் பக்தியை கண்ட அம்பாள் மீண்டும் ப்ரத்யக்ஷமாகி குழந்தையைத் தன்

மடியில் அமர்த்திக் கொண்டு தன் மென்முலைப்பாலை ஈந்தாளாம். இந்த ஸம்பவத்தை ஸ்ரீசங்கரர் **'ஸௌந்தர்யலஹரியில்'** கீழ்க்கண்ட ச்லோகத்தில் விளக்குகிறார்.

**தவ ஸ்தந்யம் மந்யே தரணிதரகன்யே ஹ்ருதயத:**
**பய: பாராவார: பரிவஹதி ஸாரஸ்வதமிவ /**
**தயாவத்யா தத்தம் <u>த்ரவிட-சிசு:</u> ஆஸ்வாத்ய தவ யத்**
**கவீநாம் ப்ரௌடானா மஜநி கமநீய: கவயிதா//**
**(ச்லோகம் 75 )**

*மலையரசன் மகளே உந்தன் முலையிலிருந்து பெருகும் பால் இதயத்திலிருந்து உற்பத்தியாகும் அமுதப் பெருக்கு போன்றும் சொல்லின் செல்வியான ஸரஸ்வதியே இவ்வடிவம் தாங்கிப் பெருகுகின்றாள் என எண்ணுகிறேன். ஏனெனில் கருணை மிகுந்த உன்னால் கொடுக்கப்பட்ட உந்தன் முலைப்பாலை பருகிய த்ராவிடக் குழந்தை தலை சிறந்த கவிஞர்களுள் மனம் கவரும் ஓர் கவிஞனாய் ஆகிவிட்டாரோ ?*

சங்கரன் தென் இந்தியாவில் தோன்றியதால் ச்லோகத்தில் வரும் **'த்ரவிடசிசு'**என்னும் சொல் சங்கரரையே குறிக்கும்.

( இன்றும் குழந்தைகளுக்கு **'அக்ஷராப்யாஸம்'** செய்யும்போது பசும்பாலில் **'ஐம்'** என்னும் பீஜத்தை எழுதி பூஜித்து குழந்தைக்குக் கொடுப்பார்கள். அப்படி கொடுத்தால் குழந்தை சிறந்த மேதாவி ஆவான் என்பது ஒரு ஐதீகம் )

(குழந்தை சங்கரன் அம்பாளுக்கு பால் நிவேதனம் செய்த **'காத்யாயனி'** கோயில் இன்றும் காலடியிலிருந்து ஒரு கிலோ மீட்டர் துாரத்தில் உள்ள

**'மாணிக்க மங்கலம்'** என்கிற ஊரில் உள்ளது. இந்த கோவிலில் மிக சிறப்பான பூஜைகளும் விழாக்களும் நடை பெற்று வருகிறது.)

சங்கரனுக்கு 5வயதில் **'பிரம்ஹோபதேசம்'** செய்யவேண்டும் என்று சிவகுரு ஆசைப்படுகிறார். ஆனால் அந்த பாக்யம் இல்லாமல் சங்கரரின் 4வது வயதில் சிவகுரு சிவலோகம் அடைந்துவிடுகிறார். சிவகுரு ஆசைப்பட்டதுபோல் அவருடைய உறவினர்கள் சங்கரனுக்கு 5வது வயதில் உபநயனம் செய்து வைத்தார்கள். சங்கரன் வேதங்களை எல்லாம் படிக்கவேண்டும் என்பதற்காக அவனுடைய தாய் அவனை குருகுலத்திற்கு அனுப்பிவைத்தார். குருகுலத்தில் படிக்கும் பிரம்மச்சாரிகள் தினமும் வீடு வீடாகச் சென்று பிக்ஷை வாங்கிவந்துதான் சாப்பிடவேண்டும். அப்போது சங்ரனுக்கு 6 வயது ஒரு துவாதசி தினத்தன்று சங்கரன் ஒரு வீட்டிற்குச் சென்று **'பவதி பிக்ஷாம் தேஹி'**என்று பிக்ஷைக் கேட்டான். அந்த வீட்டில் வஸிக்கும் தம்பதிகள் மிகவும் ஏழை. குழந்தையின் குரல் கேட்ட அந்த வீட்டுப் பெண் வீட்டில் ஏதும் இல்லாததால் பிக்ஷை கேட்பவர்களை சும்மா அனுப்பக்கூடாது என்பதற்காக வீட்டில் இருந்த ஒரு நெல்லிக்கனியைக் கொண்டுவந்து சங்கரனின் பிக்ஷா பாத்திரத்தில் கண்ணீருடன் போட்டாள். சங்கரனுக்கு கருணைப் பிறக்கிறது லஷ்மி தேவியைத் துதித்து **'கனகதாரா ஸ்தோத்ரம்'** பாடினான். சங்கரன் பாடிய முதலாவது ஸ்தோத்ரம் இதுதான். அதைக் கேட்டு மகிழ்ந்த லக்ஷ்மி தேவி அந்த வீட்டின் முற்றத்தில் பொன் நெல்லிக்கனிகளை பொழிந்தாள்.

(பொன் மழை பெற்ற அந்த வீடு இன்றும் காலடிக்கு சற்று தூரத்தில் உள்ளது. அந்த இடத்திற்கு '**பழத்தோட்டம்**' என்று பெயர். பொன் நெல்லிகனியை பெற்ற அந்த தம்பதிகளின் ஸந்ததியினர் ஒரு குடும்பம் இப்போதும் அங்கு உள்ளது. அந்த குடும்பத்திற்கு '**ஸ்வர்ணத்துமனை**' என்று பெயர்.)

குருகுலம் முடிந்து வீடு திரும்பிய சங்கரன் தன் தாயை ஒரு குறையும் இல்லாமல் பார்த்துக் கொண்டான். ஒரு நாள் ஆர்யாம்பாள் வழக்கம் போல் '**பூர்ணா நதி**' யில் குளித்துவிட்டு வரும் போது மயங்கி விழுந்துவிடுகிறாள். தாயின் துயரத்தைக் கண்ட சங்கரன் தெற்கு நோக்கி ஓடும் பூர்ணா நதியை வடக்கு பார்த்து தன் வீட்டின் பின்புறமாக ஓடவைத்தான்.

ஒரு நாள் ஸப்த ரிஷிகள் வந்து சங்கரன் அவதரித்து 8 ஆண்டுகள் முடிய இருப்பதாகக் கூறி அவதாரப் பணியை நினைவூட்டினார்கள். இதைக் கேட்ட சங்கரன் 'நான் வீட்டை விட்டு துறவியாக சென்றால்தான் இப்பணியைச் செய்யமுடியும். அதற்கான வாய்பைப் ஏற்படுத்துகிறேன்' என்று கூறினார். ஒரு நாள் சங்கரன் பூர்ணா நதியில் நீராடும்போது ஒரு முதலை சங்கரனின் காலைக்கவ்விக்கொள்கிறது. இதைக் கண்ட தாய் ஆர்யாம்பாள் கதி கலங்கிவிட்டாள். அப்போது சங்கரன் தன் தாயிடம் ஸந்நியாசம் போக அனுமதி பெறுகிறான். அனுமதி கிடைத்ததும் தன் தாயிடம் அவளுடைய கடைசி காலத்தில் வருவதாக கூறிவிட்டு காலடியை விட்டு புறப்பட்டான். **( இனி 'சங்கரர்' ) 'சங்கரர்'**. ஸந்நியாச உபதேசம் பெறுவதற்காக தன் குருவான '**கோவிந்த பகவத் பாதாளை**' தேடிக் கொண்டு

மத்தியப் பிரதேசத்தில் உள்ள நர்மதா நதிக்கரைக்கு நடந்தே சென்றார். 3 மாதங்கள் கடந்து நர்மதை நதிக்கரையை அடைந்தார். அப்போது பிரவாஹமாக பெருக்கெடுத்து ஓடிய நர்மதை நதியைத் தன் கமண்டலத்தில் அடக்கி பின் ஓட வைக்கிறார். அதன் பிறகு ஒரு குகையில் இருந்த தன் குரு கோவிந்த பகவத் பாதரைப் பார்த்து துதிக்கிறார். கோவிந்த பகவத் பாதர் எழுந்து **'குழந்தாய் நீ யார் ?'** என்று கேட்டார். இதைக் கேட்ட சங்கரர் தன்னுடைய அவதார மூலத்தைத் தெரிவித்து 'அந்த சிவம்தான் நான்' என்றும் பொருள்பட பத்து ஸ்லோகங்களைப் பாடினார். அந்த ஸ்லோகத்திற்கு **'தச ஸ்லோகி'** என்று பெயர்.

**ந பூமிர் ந தோயம் நதேஜோ ந வாயு:**
**ந கம் நேந்த்ரியம் வா ந தேஷாம் ஸமூஹ: /**

**அனைகாந்திகத்வாத் ஸுஷுப்த்யேகஸித்த:**
**ததேகோ(அ)வசிஷ்ட: சிவ: கேவலோ(அ)ஹம் //**

நான் பூமி ஜலம் தேஜஸ் வாயு ஆகாயம் என்ற எந்த பஞ்சபூதப்பொருள் எதுவும் இல்லை அல்லது அவற்றின் கலவையும் அல்ல. அது **'பல'** வாக இல்லாமல் **'ஒன்றாகவே'** உள்ளது பிரபஞ்சத்தில் காணப்படும் பொருள்கள் அனைத்தும் 'அது அல்ல அது அல்ல' என்று அப்புறப்படுத்தப்பட்டு முடிவில் **'சிவம்'** என்ற ஆனந்த ஸ்வரூபம் மட்டும் மீதம் இருக்கும் நிலையில் அந்த ஆத்ம ஸ்வரூபம் தூக்கத்தில் ப்ரகாசிக்கும் சுத்தமான **'சிவன்'** நான்தான்.

**'யார் நீ'** என்ற ஒரு கேள்விக்கு சங்கரன் இவ்வளவு ஆழமாக பதில் கூறியதைக் கேட்ட கோவிந்த பகவத் பாதாள் அன்பு பொங்கும் உள்ளத்தோடு சங்கரனைத் தன்னுடைய சிஷ்யனாக ஏற்றுக்கொண்டார். ஸ்ரீசங்கரரும் தன்னுடைய குருவின் திருப்பாதங்களை தொட்டு நமஸ்கரித்து தன் குருவை துதித்து '**குருபாதுகா பஞ்சகம்**' என்ற ஸ்தோத்ரம் இயற்றினார். உணர்வாலும் உள்ளத்தாலும் ஏற்கனவே ஸந்நியாசியாகிவிட்ட சங்கரனை உடலால் ஸந்நியாசியாக்க குருநாதர் சங்கரனின் முடியைக் களையவைத்து காவி உடைகளை வழங்கி துறவு மந்திரத்தைப் புகட்டினார். நெற்றியில் நீறுடன் உலக நலனுக்காக துறவியான சங்கரன் புதிய பொலிவினைப் பெற்று **'சங்கரர்'** ஆகிவிட்டார்.

சங்கரர் தமது 8 வயது முதல் 11 வயதுவரையிலும் தன்னுடைய குருவுடன் இருந்து அவருக்கு ஸேவை செய்துக்கொண்டிருந்தார். ஒருநாள் கோவிந்த பகவத்பாதாள் தன் சிஷ்யனிடம் *'குழந்தாய் நீ அத்வைதத்தை நிலைநாட்டவே அவதாரம் செய்திருக்கிறாய். அதற்கு சிறந்த இடம்* ***'காசி'*** *நீ அங்கு சென்று உன்னுடைய பணிகளைத் தொடர்வாயாக. உன்னுடைய திக் விஜயம் வெற்றி பெறட்டும்'* என்று வாழ்த்தி வழி அனுப்பினார்.

தந்தைபோல் பாவிக்கும் தன் குருவின் கட்டளைப்படி சங்கரர் கங்கையால் சூழப்பட்ட **'காசிமாநகரம்'** சென்று காசியில் காசி விச்வநாதரையும் அன்ன பூர்ணியையும் தரிசித்து பூஜைகள் செய்து

சிலகாலம் காசியில் தங்கியிருந்து பின்காசியிலிருந்து தனது புனித பயணத்தைத் தொடர்ந்த சங்கரர் தன் சிஷ்யர்களுடன் நேபாளம் வரை சென்று அங்கிருந்து கால்நடையாகவே திருச்செந்துார் வரையிலும் சென்று புண்ணிய நதிகளில் நீராடி பல புண்ணியத் தலங்களைத் தரிசித்து சில ஆலயங்களில் ஸ்ரீசக்ர பிரதிஷ்டை செய்து மடங்களை ஸ்தாபித்தார். வழியில் பலதரப்பட்ட மக்களைச் ஸந்தித்து பல ஞானிகளிடம் வாதம் செய்து ஜெயித்து அத்வைதத்தை நிலைநாட்டினார்.

அவரது மனதிலிருந்து **'வேத ஸார ஸ்தவம்' 'சிவ நாமாவளி' 'கால பைரவ அஷ்டகம்'** முதலியன எழுந்தன. காசியில் 'மணிகர்ணிகா' கட்டத்தில் சங்கரர் தங்குவதற்கு காசி மஹாராஜா எல்லா ஏற்பாடுகளையும் செய்தார். அங்கு 'ஸதஸ்' நடக்கிறது. பண்டிதர்கள் பலரும் சங்கரரை வந்து பார்க்கிறார்கள். காசி விச்வநாதர்மீது **'விஸ்வநாதாஷ்டகமும்'** அன்னபூர்ணியின் மீது **'அன்ன பூர்ணாஷ்டக'** மும் எழுதினார்.

## ஸ்ரீசங்கரர் திக் விஜயம் செய்த புண்ணியத் தலங்கள்.

### 1. கேரள மாநிலம்

1. காலடி
2. குருவாயூர்
3. திருவநந்தபுரம்
4. திருச்சிவப்பேரூர் ( திருச்சூர் )

### 2.. தமிழ் நாடு

1. சிதம்பரம்
2. கன்யாகுமரி
3. காஞ்சிபுரம்
4. கும்பகோணம்

5. மாயவரம்
6. ஸ்வாமி மலை
7. திருச்சிராப்பள்ளி
8. ஸ்ரீரங்கம்
9. திருவிடைமருதூர்
10. திருவானைக்கா
11. மதுரை
12. திருச்செந்தூர்
13. ராமேஸ்வரம் (சேது)
14. பூந்தமல்லி
15. மைலாப்பூர்
16. திருவத்தியூர்
17. மாங்காடு

**3. ஆந்திரா**

1. அவனிகதா
2. குடூர்
3. ராஜமுந்திரி
4. ராமச்சந்திரபுரம்
5. ஸ்ரீசைலம்
6. ஸ்ரீகாளஹஸ்த்தி
7. வேங்கடகிரி
8. திருப்பதி

**4. கர்நாடகா**

1. கோகர்ணம்
2. ஹம்பி ( விருபாக்ஷ )
3. புஷ்பகிரி
4. சிருங்கேரி
5. குகசுப்ரமண்யா
6. மூகாம்பிகா
7. ஸ்ரீ பலிபுரம்

**5. மஹாராஷ்ட்ரா**

1. அனுகா நாகநாத்
2. பீம ஷங்கர் ( பூனே )
3. நாசிக் ( பஞ்சவடி )
4. பந்தர்பூர்
5. திரயம்பகா
6. துல்சாபூர்

**6. மத்திய பிரதேஷ்**

1. உஜ்ஜைனி
2. அமர்காந்தக்
3. மஹேஷ்வர்
4. மண்டலீஸ்வர்
5. ஓங்காரேஷ்வர் ( நர்மதா நதி )

*7. உத்ரபிரதேஷ்*

1. அயோத்யா
2. ஹத்தினாபூர்
3. மதுரா
4. நைமிசாரண்யம்
5. பிருந்தாவன்
6. காசி (வாரணாசி)
7. அலகாபாத் (ப்ரயாகை த்ரிவேணி)
8. கேதாரம் (கேதார்நாத்)

**8. உத்ரகாண்ட் (உத்ராஞ்ஜல்)**

1. பத்ரிநாத்
2. ஹரித்வார்
3. ஜோஷிமட்
4. ஜ்வாலாமுகி
5. நீல்சாந்த்
6. உத்ரகாசி

9. குஜராத்

1. துவாரகா
2. சோம்நாத்

**10. அஸ்ஸாம்**

1. கோஹாத்தி (காம்கயா)
2. சோனாப்பூர்

**14. ஜம்மு காஷ்மீர்**

1. ஸ்ரீநகர்

**15. ஹிமாசல் பிரதேஷ்**

1. கேதார்நாத்
2. கைலாஷ்

**11. பீஹார்**

1. கயா
2. நாளந்தா
3. பாட்னா (பாடல்புத்ரம்)

*12. ஒடிசா* 1. பூரி

*13. ஹரியானா*

1. குருஷேத்ரா

சங்கரர் திக் விஜயம் செய்த இடங்களில் எல்லாம் அநேக ஸ்ரோத்திரங்களையும் அஷ்டகங்களைம் பஞ்சகங்களையும் புஜங்கங்களையும் இயற்றினார். அவை எல்லாம் இன்றும் பிரசித்தமானவைகளாக இருக்கின்றன.

*ஆதி சங்கரர் இயற்றிய ஸ்தோத்திரங்கள்/ அஷ்டகங்கள் /புஜங்கங்கள் முதலியவை.*

## 1. பஞ்சரத்னம்

1. கணேச பஞ்சரத்னம்.
2. ஸ்ரீ லலிதா பஞ்சரத்னம்.
3. ஸ்ரீ மீனாக்ஷி பஞ்சரத்னம்.
4. லக்ஷ்மீ நரசிம்ஹ பஞ்சரத்னம்.
5. ஹனுமத் பஞ்சரத்னம்.
6. அத்வைத பஞ்சரத்னம்.
7. தேவி பஞ்சரத்னம்
8. அம்பா பஞ்சரத்னம்.

## 2. புஜங்கம்

1. கணேச புஜங்கம்
2. சுப்ரஹ்மணிய புஜங்கம்
3. சிவ புஜங்கம்
4. பவானி புஜங்கம்
5. தேவி புஜங்கம்
6. சிவ அபராத புஜங்கம்
7. துர்கா அபராத புஜங்கம்
8. காளி அபராத புஜங்கம்

## 3. ஸ்தோத்ரம்

1. வரத கணேச ஸ்தோத்ரம்
2. ப்ராதஸ்மரண ஸ்தோத்ரம்
3. வேதஸார சிவ ஸ்தோத்ரம்
4. சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்ரம்
5. தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்
6. கனகதாரா ஸ்தோத்ரம்
7. த்வாதச லிங்க ஸ்தோத்ரம்
8. அர்த்தநாரீச்வர ஸ்தோத்ரம்
9. லக்ஷ்மீந்ருஸிம்ஹ கராவலம்ப ஸ்தோத்ரம்
10. தசாவதார ஸ்தோத்ரம்
11. ஹரிஹரநாமாவளி ஸ்தோத்ரம்
12. காசி ஸ்தோத்ரம்
13. கங்கா ஸ்தோத்ரம்
14. மீனாக்ஷி ஸ்தோத்ரம்
15. நாராயண ஸ்தோத்ரம்
16. ஷட்பதீ ஸ்தோத்ரம்
17. விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்
18. சிவ அபராத க்ஷமாபண ஸ்தோத்ரம்
19. உமா மஹேஸ்வர ஸ்தோத்ரம்
20. விஷ்ணு புஜங்கப்ரயாத ஸ்தோத்ரம்
21. சிவபாதாதி கேசாந்த வர்ணன ஸ்தோத்ரம்
22. சிவகேசாதி பாதாந்த வர்ணன ஸ்தோத்ரம்
23. குருபாதுகா பஞ்சக ஸ்தோத்ரம்

## 4. அஷ்டகம்

1. கணேச அஷ்டகம்
2. ஸ்ரீ திரிபுரசுந்தரி அஷ்டகம்
3. ஸ்ரீ ப்ரமாரம்ப அஷ்டகம்
4. கங்காஷ்டகம்
5. யமுனாஷ்டகம்
6. நர்மதாஷ்டகம்
7. மணிகர்ணிகாஷ்டகம்
8. ஸ்ரீ தட்க்ஷிணாமூர்த்தி அஷ்டகம்

9. குர்வஷ்டகம்.
10. கால பைரவாஷ்டகம்.
11. ஜகந்நாதாஷ்டகம்
12. பாண்டுரங்காஷ்டகம்
13. ஸ்ரீ கிருஷ்ணாஷ்டகம்
14. கோவிந்தாஷ்டகம்
15. தட்க்ஷிணாமூர்த்தி அஷ்டகம்
16. அன்னபூர்ணாஷ்டகம்
17. மீனாக்ஷி அஷ்டகம்
18. ராஜராஜேஸ்வரி அஷ்டகம்
19. அச்யுதாஷ்டகம்
20. ஹரிசரணாஷ்டகம்
21. ஜகன்னாதாஷ்டகம்
22. ரங்கநாதாஷ்டகம்
23. புஷ்கர அஷ்டகம்
24. சிவாஷ்டகம்.
25. அம்பா அஷ்டகம்
26. கல்யாணவிருஷ்டி அஷ்டகம்
27. காமபீமாஷ்டகம்
28. பவானி அஷ்டகம்
29. தன்யாஷ்டகம்
30. ஸ்வரூபானு சந்தானாஷ்டகம்

## 5. ஸ்தவம்

1. கல்யாண வ்ருஷ்டி ஸ்தவம்
2. மந்த்ர மாத்ருக்கா புஷ்பமாலா ஸ்தவம்
3. திரிபுர ஸுந்தரி வேத பாத ஸ்தவம்

## 6. ஸ்துதி

1. ஸ்வர்ணமாலா ஸ்துதி
2. ஹரிமீடே ஹரி ஸ்துதி
3. தச ச்லோகீ

## 7. வர்ணமாலா

1. ஸ்ரீ சிவ பாதாதி கேசாந்த வர்ணமாலா
2. ஸ்ரீ சிவ கேசாதி பாதாந்த வர்ணமாலா
3. தட்க்ஷிணாமூர்த்தி வர்ணமாலா
4. சியாமளா நவரத்னமாலிகா
5. ப்ரச்னோத்தர ரத்னமாலிகா

## 8. பஞ்சகம்

1. மாத்ரு பஞ்சகம்
2. லலிதா பஞ்சகம்
3. தேவீ பஞ்சகம்
4. காசி பஞ்சகம்
5. மனீஷா பஞ்சகம்
6. மாயா பஞ்சகம்
7. யதி பஞ்சகம்
8. உபதேச பஞ்சகம் (அல்லது) சாதனா பஞ்சகம்

## 9. மானஸ பூஜா

1. ம்ருத்யுஞ்ச மானஸீக பூஜா
2. சிவ மானச பூஜா
3. பகவதி மானஸ பூஜா
4. திரிபுர ஸுந்தரீ மானச பூஜா
5. பகவான் மானஸ பூஜா
6. நிர்குண மானஸ பூஜா
7. தேவீசதுக்ஷஷ்டி உபசார பூஜா

## 10. லஹரீ

1. சிவானந்த லஹரீ
2. ஆனந்த லஹரீ
3. ஸௌந்தர்யலஹரீ
4. ஜீவன் முக்தாநந்த லஹரீ

## 11. மற்றவை

1. கௌரீ தசகம்
2. ப்ரௌடானுபூத்
3. பஜகோவிந்தம் (மோஹமுத்கரம்)
4. அநாத்மஸ்ரீ விகர்ஹணம்
5. அத்வைதானுபூதி
6. தஸஸ்லோகி
7. ப்ரஹ்மாநுசித்தனம்
8. ஸ்வாத்மப்ரகாசிகா
9. லஷ்மீ நரஸிம்ம பஞ்சரத்னம்
10. லகுவாக்ய வ்ருத்தி
11. நிர்வாண மஞ்ஜரி
12. யோகதாராவலீ
13. வாக்யவ்ருத்தி
14. தத்போபதேச
15. கல்யாண வ்ருஷ்டிஸ்தவம்
16. ஏகச்லோக ப்ரகரணம்

## ஸ்ரீசங்கரர் இயற்றிய பாஷ்யங்கள்

(1) வியாஸ பகவான் எழுதிய 'ப்ரம்மஸூத்ரம்'
(2) விஷ்ணுஸஹஸ்ரநாமம் (3) ஸனத்ஸுஜாதீயம்
(4) 10 உபநிஷத்துக்கள். (5) பகவத் கீதை
(6) காயத்ரி மந்திரம் முதலியன. மேலும் 'பிரகரண கிரந்தங்கள்' என்று அழைக்கப்படும் அநேக வேதாந்த நூல்களும் எழுதினார். ஸ்ரீசங்கரர் முதலில் எழுதிய பிரகரண கிரந்தம் 'விவேக சூடாமணி' (குருவானவர் சிஷ்யனுக்கு போதிக்கும் பாணியில் ஸம்பாஷணை முறையில் அமைந்துள்ளது)

ஸ்ரீசங்கரர் காசியில் இருக்கும்போது ஒருநாள் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்திற்கு பாஷ்யம் எழுத விரும்பினார். தன் சீடர் ஒருவரை அழைத்து 'உள்ளே இருந்து ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம புத்தகத்தைக் கொண்டுவா' என்றார். சிஷ்யனும் உள்ளேபோய் ஒரு புத்தகத்தைக் கொண்டுவந்து கொடுத்தான். அதைப் பிரித்துப் பார்த்தபோது அது விஷ்ணு ஸஹஸ்ரநாமமாக இருந்தது. ***'நான் லலிதா ஸஹஸ்ரநாம புத்தகத்தைக் கொண்டுவரச் சொன்னால் இதைக் கொண்டு வந்திருக்கிறாயே போய் லலிதா ஸஹஸ்ரநாம புத்தகத்தைக் கொண்டுவா'*** என்றார். சிஷ்யனும் உள்ளே போய் புத்தகத்தைக் கொண்டுவந்து கொடுத்தபோது இந்த முறையும் அது விஷ்ணு ஸஹஸ்ர நாம புத்தகமாகத்தான் இருந்தது. ஸ்ரீசங்கரர் சிஷ்யனை கோபித்துக்கொண்டார். அப்போது சிஷ்யன் 'ஸ்வாமி மன்னிக்கவேண்டும் நான் உள்ளே போய் லலிதா ஸஹரநாம புத்தகத்தை எடுத்தால் பட்டுப்

பாவாடை கட்டிக்கொண்டு ஒரு கன்னிப் பெண் **'இதைக் கொண்டுபோய் கொடு'** என்று அதட்ராளே' என்று சொன்னார். ஸ்ரீசங்கரர் சற்றே கண்களைமூடி தியானித்தார்.

அப்போது 'சங்கரரே எனது சகோதரன் பெருமையைக் கூறும் விஷ்ணுஸஹஸ்ரநாமத்துக்கே பாஷ்யம் எழுதுங்கள்' என அம்பிகையின் அசரீரி கேட்டதாம். ஸ்ரீசங்கரரும் அவ்வாறே விஷ்ணுஸஹர்நாமத்திற்கு பாஷ்யம் எழுதினாராம். விஷ்ணுஸஹஸ்ரநாமத்திற்கு முதலில் பாஷ்யம் எழுதியவர் ஆதி சங்கரர்தான்.

காசியில் ஒரு நாள் பகவான் வேதவியாஸர் வயதான ஒரு தொண்டு கிழவனாராக ஸ்ரீசங்கரரின் முன்தோன்றி தான் எழுதிய பிரம்ம ஸூத்திரத்திற்கு ஸ்ரீசங்கரர் எழுதிய பாஷ்யத்தை ஆக்ஷேபித்து வாதம் செய்தார். வந்திருப்பது வியாஸ பகவான்தான் என்று உணர்ந்த ஸ்ரீசங்க்ரர் வியாஸரின் கால்களில் விழுந்து நமஸ்கரித்தார். உடனே வியாஸர் சங்கரரிடம் 'சங்கரா உமது ஆயுளான 16 வருடங்கள் முடியப்போகிறது. நீர் மேலும் பல இடங்களுக்குச் சென்று அத்வைதத்தை எதிர்ப்பவர்களின் கொள்கைகளை வேறோடு களைந்தெரிந்து அத்வைதத்தை நிலை நாட்டவேண்டும் என்பதால் மேலும் 16 வருடங்களை 'பிரம்மா'விடமிருந்து பெற்று வந்துள்ளேன்' என்று கூறி மறைந்தார்.

வியாஸர் விடுத்த கட்டளையை மேற்கொண்டு ஸ்ரீசங்கரர் பாரத தேசமெங்கும் பயணம் செய்து பல மதத் தலைவர்களையும் ஸந்தித்து தன்னுடைய அறிவுபூர்வமான வாதத் திறமையால் அவர்களுடன் வாதம் செய்து வெற்றி பெற்று அவர்களை தம்பால் ஈர்த்துக்கொண்டு அத்வைத ஸித்தாந்தத்தை நிலைநாட்டினார்.

# ஸ்ரீ ஆதி சங்கரர் ஸ்தோத்ரங்கள் எழுதிய இடங்களும் அவர் வாழ்க்கையில் நடந்த சில அதிசய சம்பவங்கள்

## 'மனீஷா பஞ்சகம்'

ஒரு நாள் ஸ்ரீசங்கரர் கங்கையில் குளித்துவிட்டு தன் சிஷ்யர்களுடன் விச்வநாதர் ஆலயத்திற்கு சென்றுக் கொண்டிருந்தார். அப்போது ஒரு **புலயன்** நான்கு நாய்களுடன் சங்கரரின் எதிர் திசையிலிருந்து வந்துக் கொண்டிருந்தான். அவன் சங்கரரின் அருகே வந்ததும் அவருடைய சிஷ்யன் புலையனை **'விலகு விலகு'** என்றார். இதைக்கேட்ட புலையன் சங்கரரை நோக்கி

**அன்னமயாதன்னமயம் அதவா**
**சைதன்யமேவ சைதன்யாத் ।**
**த்விஜவர தூரீகர்தும் வாஞ்சஸி**
**கிம் ப்ரூஹி கச்ச கச்சேதி ॥**

*'பிராமணர்களில் சிறந்தவரே யாரை விலகச் சொல்கிறீர்கள் ? உணவினால் உருவான இந்த*

*உடலிருந்து அதே உணவினால் உருவான உங்கள் உடல் விலகவேண்டுமா ? அல்லது என்னிடம் உள்ள சைதன்யத்திலிருந்து உங்களிடம் உள்ள சைதன்யம் விலகவேண்டுமா ?' என்று கேள்விகளை எழுப்பினான்.*

அதைக் கேட்ட ஸ்ரீசங்கரர் வந்திருப்பது ஸாதாரன புலையன் அல்ல காசி விச்வநாதரே நான்கு வேதங்களுடன் வந்திருப்பதை தன்னுடைய ஞானதிருஷ்டியால் உணர்ந்து புலையனின் காலில் விழுந்து **'மனீஷா பஞ்சகம்'** என்ற ஐந்து ஸ்லோகங்கள் எழுதினார். உடனே அங்கு காசி விச்வநாதர் காட்சியளித்து மறைந்தார். நான்கு நாய்களும் நான்கு வேதங்களாயின.

## 'பஜகோவிந்தம்'

ஒரு நாள் ஸ்ரீசங்கரர் தன் சிஷ்யர்களுடன் பல பண்டிதர்களும் வேதம் ஓதிக்கொண்டிருந்த ஒரு பாடசாலை வழியாகப் போய்க்கொண்டிருந்தார். அப்போது அந்த பாடசாலையின் ஒரு மூலையில் இன்றைக்கோ நாளைக்கோ காலனுக்கு இறையாகிற நிலையில் இருந்த ஒரு வயதான கிழவர் 'வியாகரண சூத்திரம்' வைத்துக்கொண்டு அதில் வரும் ஒரு பகுதியான 'டுக்ருங் கரணே' என்னும் இலக்கண சொல்லை மனப்பாடம் செய்துக்கொண்டிருப்பதைக் கண்டார். அந்த வயதானவர்மீது ஸ்ரீசங்கரருக்கு கருணை பிறந்தது. இந்த உலகமே பலவித மோஹத்தில் மூழ்கி அழிகிறதே. ஆயுள் முடியும் நேரத்தில் கடவுளின் திருவருளைப் பெறுவதை விட்டு

பந்தத்திற்கும் பாசத்திற்கும் காரணமானதை மனது நாடுகிறதே இந்த மூட மக்களை கரையேற்ற வேண்டாமா என்று சிந்தித்து ஒரு **'க்ருதி'** பாடினார். அதற்கு **'மோஹமுத்கரம்'** என்று பெயர். **'முத்கரம்'** என்றால் **'உலக்கை'** என்று பொருள். அதாவது மோஹத்தின் தலையில் உலக்கையால் அடித்தல் என்று பொருள். ஸ்ரீசங்கரரின் குருவான கோவிந்த பகவத் பாதாளை நினைவு கூறும் வகையில் பல தத்துவக் கருத்துக்கள் செறிந்த இந்த ஸ்தோத்திரம் **'பஜகோவிந்தம்'** என்கிற பெயராலேயே அழைக்கப்படுகிறது.

**பஜகோவிந்தத்திலிருந்து முதல் ஸ்லோகம்.**

**பஜகோவிந்தம் பஜகோவிந்தம்**
**கோவிந்தம் பஜ மூடமதே /**
**ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே**
**நஹி நஹி ரக்ஷதி 'டுக்ருங் கரணே //**

*'ஓ மூடனே இறைவனுக்கு எப்போதும் மனதாலும் வாக்காலும் உடலாலும் பணிபுரிவதை விட்டு 'டுக்ருங் கரணே' போன்ற இலக்கணச் சொற்களை பயில்வதால் பலனில்லை. அது இறுதிக் காலத்தில் உன்னைக் காப்பாற்றாது. ஆகவே கோவிந்தனையே உன் மனதாலும் வாக்காலும் உடலாலும் எப்போதும் பஜனம் செய்துக் கொண்டிரு.'*

ஆதி சங்கரர் குருவைத் தேடி போகும்போது 'நர்மதை' பொங்கி எழ அதை தன் கமண்டலத்தில் அடக்கி பின் குரு "**கோவிந்த பகவத் பாத**"**ரை** ஸந்திக்கிறார். குரு சங்கரைப் பார்த்து "**மகனே யார் நீ**" என்று கேட்டபோது அந்த கேள்விக்கு எவ்வளவு பெரிய அர்த்தம் இருக்கிறது என்பதை உணர்ந்த சங்கரர் திருவாய் மலர்ந்து அருளியதுதான் "**நிர்வாணதசகம்**".

## குரு அஷ்டகம்

சங்கரர் குருவின் முன் சந்யாசம் மேற்கொண்டபோது குருவை வணங்கி பாடியதுதான் "குரு அஷ்டகம்"

## வேத ஸார சிவ ஸ்தவம் சிவ நாமாவளி ஸ்தோத்ரம் கால பைரவ அஷ்டகம்.

சங்கரர் ஸ்ரீகாசி விஸ்வநாதரையும் அன்ன பூர்ணியையும் தரிசித்து அன்ன பூர்ணியை வேண்டி பாடிய பாடல்கள்.

## "வனதுர்க்கா மந்திரம்"

சங்கரர் மண்டலமிச்ரரின் மனைவி "**ஸரஸவாணி**"யிடம் வாதத்தில் ஜெயித்து சரஸவாணி விண்ணுலகம் செல்ல திட்டமிட்டபோது சரஸவாணி சரஸ்வதியின் வடிவமே என்பதை உணர்ந்த சங்கரர்

அவள் இறந்து விடா வண்ணம் இருக்க பாடிய படல்தான் "**வனதுர்க்கா மந்திரம்**".

## "சிவானந்த லஹரி"

சங்கரர் ஸ்ரீசைலம் சென்றபோது சிவ ஆனந்த வெள்ளம் "மல்லிகார்ஜுனப் பெருமாள்" முன் பாடியதுதான் "**சிவானந்த லஹரீ**".

## "சௌந்தர்யலஹரி"

அன்னை அகிலாண்டேஸ்வரியின் அழகு வெள்ளத்தில் பொங்கி எழுந்தது "**சௌந்தர்யலஹரி**"

## "ரங்கநாத அஷ்டகம்"

ஸ்ரீசங்கரர் ஸ்ரீரங்கம் வந்தபோது அங்கே எழுந்தருளியுள்ள ஸ்ரீரங்கநாதரை தரிசித்தபோது பாடியதுதான் "**ரங்கநாத அஷ்டகம்**"

## "மீனாட்சி பஞ்சரத்னம்"

மதுரை மீனாட்சியின் அழகிற்கு அழகூட்ட பாடிய பாடல் "**மீனாட்சி பஞ்சரத்னம்**"

## "சுப்பிரமணிய புஜங்கம்"

ஸ்ரீசங்கரருடன் வாதம் செய்து தோற்றுப்போன **'அபிநவகுப்தர்'** தான் தோற்றதைத் தாங்கிக் கொள்ளமுடியாமல் **'அபிசார வேள்வி'** செய்து ஸ்ரீசங்கரருக்கு உடல் உபாதை ஏற்படும்படி செய்துவிட்டார். அப்போது ஸ்ரீசங்கரர் கர்னாடகாவில் உள்ள கோகர்ணத்தில் தங்கியிருந்தார். அன்று ஒருநாள் பகவான் அவருடைய கனவில் தோன்றி 'என் குமரன் ஷண்முகன் குடியிருக்கும் ஸ்தலமான ஜெயந்திபுரம் (திருச்செந்துார்) சென்று அவனை தரிசித்தால் நீ பூர்ணகுணமடைவாய்' என்று கூறினாராம். விழித்துப் பார்த்தபோது ஸ்ரீசங்கரர் பக்கத்தில் வீபூதி இருந்ததாம். உடனே திருச்செந்துார் சென்ற ஸ்ரீசங்கரர் கடலில் நீராடி முருகன் சன்னிதியில் தன்னை மறந்து நின்றபோது ஆதிசேஷன் ( பாம்பு ) ஊர்ந்துவந்து முருகனின் காலடியில் வந்ததைக் கண்டார். அப்போது அவர் திருவாயிலிருந்து வந்ததுதான் **'சுப்பிரமணிய புஜங்கம்'**. (புஜங்கம் என்றால் பாம்பு). பிறகு கோயிலில் கொடுத்த **'பத்ர வீபூதியை'**ப் (பன்னீர் வீபூதி) அணிந்துக் கொண்ட ஸ்ரீசங்கரருக்கு விரைவில் நோய் குணமாயிற்றாம். இந்த 'சுப்பிரமணிய புஜங்கம்' 33 ஸ்லோகங்களைக் கொண்டது. அவதார புருஷரான ஸ்ரீசங்கரர் தானே நோயை நீக்கியிருக்கலாம் ஆனால் மானிடப் பிறப்பில் துயரத்தை தானே அனுபவித்து திருச்செந்துார் முருகனின் 'பன்னீர் (இலை) வீபூதி' யின் மகிமையை உலகத்தவருக்கு காட்டவே அவர் இந்த திருவிளையாடலை நிகழ்த்தினார் என்று தோன்றுகிறது.

'இலை விபூதி'யின் மகிமையை ஸ்ரீசங்கரரே 25வது ஸ்லோகத்தில் அழகாக கூறுகிறார்..........

**அபஸ்மார குஷ்ட க்ஷயார்சப்ரமேஹ**
**ஜ்வரோந்மாதகுல்மாதிரோகா மஹாந்த: /**
**பிசாசாஸ்ச ஸர்வே பவத்பத்ரபூதிம்**
**விலோக்ய க்ஷணாத்தாரகாரே த்ரவந்தே.//**
**( சு.பு 25 )**

*தாரகனை ஸம்ஹரித்த வீரனே! உனது பன்னீர் இலை விபூதியைக்கண்டு அபஸ்மாரம் குஷ்டம் க்ஷயம் அர்சஸ் ப்ரமேகம் ஜ்வரம் உந்மாதம் குல்மம் முதலிய பெரிய வியாதிகளும் பிசாசுகளும் ஒரு நொடியில் ஓடிவிடுகின்றனவே! என்ன ஆச்சர்யம்!.*

## "விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்திரம்"

திருப்பதியில் ( திருவேங்கட மலையில் ) மலையில் திருப்பதிப் பெருமாளின் திவ்ய தரிசனத்தின் பின் பாடிய ஸ்தோத்ரம்.

## "துவாதசலிங்க ஸ்தோத்திரம்"

நாசிக்கில் கோதாவரி தீரத்தில் "திரியம்பகேஸ்வரையும்" சோமநாதபுரத்தில் "பரமேஸ்வரனையும்" வணங்கிய சங்கரர் இந்த இரண்டு ஸ்தலங்களும் சேர்ந்து பன்னிரெண்டு சிவ ஸ்தலங்களிலும் பாதம் பதித்த சங்கரர் பாடியது "துவாதச லிங்க ஸ்தோத்திரம் ".

## "ஷட்பதீ ஸ்தோத்திரம்"

பத்ரிநாத் சென்ற சங்கரர் அங்கு பத்ரிகாவனத்தில் பரந்தாமன் தரிசனம் முடித்து பாடிய தோத்திரம்.

## "காசி அஷ்டகம்"

## "அன்னபூர்ணா அஷ்டகம்"

காசியில் சங்கரர் இயற்றிய அஷ்டகங்கள்.

## "ஜகந்நாத அஷ்டகம் "

காசியிலிருந்து "பூரி" சென்ற சங்கரர் அங்கு ஒரு மடத்தை நிர்மாணித்து பூரி ஜகந்நாதர் கோவிந்தனை சேவித்து பாடிய அஷ்டகம்.

## சிவ பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம் (அ) கேசாதி பாதாந்த ஸ்தோத்ரம்

ஸ்ரீசங்கரர் தமது யாத்திரையில் 'கேதார்நாத்' வந்தபோது தமது யோக சக்தியின்மூலம் தன்னுடைய பூத சரீரத்தை கிடத்திவிட்டு சூஷ்ம சரீரத்துடன் கைலாயம் சென்று அன்னையுடன் வீற்றிருந்த சிவபெருமானை கண்டு ஆனந்தத்தில் அவரது அடிமுதல் முடிவரை வர்ணித்து பாடிய ஸ்தோத்ரம்தான் **'சிவ பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்'**

## துவாதச ஜோதிர் லிங்க ஸ்தோத்ரம்

பன்னிரண்டு ஜோதிர் லிங்கங்களில் ஒன்று கேதார்நாத்தில் உள்ளது. அங்கு தரிசனம் செய்துவிட்டு ஸ்ரீசங்கரர் பாடிய ஸ்தோத்ரம் '**துவாதச ஜோதிர் லிங்க ஸ்தோத்ரம்**'

## 'சிவபுஜங்க ஸ்தோத்ரம்'/ 'விஷ்ணு புஜங்கம்'/ 'கிருஷ்ணாஷ்டகம்' மற்றும் 'கோவிந்தாஷ்டகம்

ஸ்ரீசங்கரர் சிருங்கேரியில் தங்கியிருந்தபோது தன்னுடைய தாயின் அந்திமகாலம் நெருங்கியதை உள்ளத்தில் உணர்ந்தார். தான் சந்நியாசம் வாங்கும்போது தாய்க்கு செய்துக்கொடுத்த சத்தியம் ஞாபகத்திற்கு வரவே உடனே தன்னுடைய யோக சக்தியால் வாயு மார்க்கமாக காலடியை அடைந்தார். தன் மகனைக் கண்டதும் ஆர்யாம்பாள் மிகவும் சந்தோஷம் அடைந்தாலும் தன்னுடைய அந்திமக்காலம் நெருங்கிவிட்டதை ஸ்ரீசங்கரரிடம் ' சங்கரா என்னுடைய மரணம் நெருங்கிவிட்டது எனக்கு ஞானோபதேசம் செய்' என்று வேண்டினாள். ஸ்ரீசங்கரரும் வாஞ்ஜையோடு தன் தாயின் தலையை தன் மடியில் வைத்துக்கொண்டு ஸ்ரீமத் பாகவதத்தில் 'கபில பகவான்' தன் தாய் 'தேவஹூதிக்கு' ஞானோபதேசம் செய்ததுபோல் தன் தாய்க்கு ஆத்மபோதத்தை உபதேசித்து சிவனை துதித்து '**சிவபுஜங்க ஸ்தோத்ரம்**' பாடினார். உடனே

சிவகணங்கள் தோன்றினார்கள். அவர்களைக் கண்ட ஆர்யாம்பாள் பயந்தார். உடனே ஸ்ரீசங்கரர் மஹாவிஷ்ணுவை நினைத்து **'விஷ்ணு புஜங்கம்' 'கிருஷ்ணாஷ்டகம்'** மற்றும் **'கோவிந்தாஷ்டகம்'** பாடினார். உடனே விஷ்ணுதூதர்கள் நேரில் தோன்றி ஆர்யாம்பாளின் ஜீவனை புஷ்பக விமானத்தில் வைகுண்டத்திற்கு அழைத்துச் சென்றார்கள். பிறகு தன் தாய்க்கு செய்துக்கொடுத்த ஸத்தியத்தின்படி ஈமக்கிரியைகளை செய்ய தீர்மானித்தார். ஆனால் காலடிமக்கள் ஸந்நியாசிக்கு உறவு கிடையாது அவர் கிரியைகளைச் செய்யக்கூடாது என்று எதிர்ப்பு தெரிவித்து ஒத்துழைக்க மறுத்துவிட்டார்கள். ஸ்ரீசங்கரர் அவர்களின் எதிர்ப்பையும் மீறி தன் வயிற்றில் பத்துமாதம் சுமந்த தாயைத் தன் தோளில் தூக்கிக்கொண்டு தன் வீட்டின் தோட்டத்தில் கிடத்தி தன் கைகளைத் தேய்த்து அக்னியை தோற்றுவித்து தாயின் பூதஉடலுக்கு தீமூட்டினார். ஸந்நியாசியாக இருந்தாலும் அவருடைய உள்ளத்தில் இருந்த தாய்பாச உணர்ச்சிகளை அவரால் அடக்கிக் கொள்ளமுடிய வில்லை அது அவரது உள்ளத்திலிருந்து பீறிட்டுக்கொண்டு ஸ்லோகங்களாக வெளியே வந்தது. அதுதான் மிக உயர்ந்த தத்துவங்களைக் கொண்ட **'மாத்ருகா பஞ்சகம்'** என்ற ஐந்து ஸ்லோகங்கள். அதிலிருந்து முதல் ஸ்லோகம்.

ஆஸ்தாம் தாவதியம் ப்ரஸ்திஸமயே
துர்வாரசூலவ்யதா நைருச்யம்
தநுசோஷணம் மலமமீ
சய்யாச ஸாம்வத்ஸரீ /
ஏகஸ்யாபி நகர்பபார பரணக்லேசஸ்ய
யஸ்யா க்ஷம: தாதும்
நிஷ்க்ருதி முந்நதோபி தநய:
தஸ்யை நம: //

*"அம்மா என்னை உன் வயிற்றில் மலம் மூத்திரம் நிறைந்த படுக்கையில் பத்துமாதம் சுமந்து வாய்க்கு ருசி இல்லாத உணவு வகைகளை உண்டு பல கஷ்டங்களை அனுபவித்திருக்கிறாயே. நீ பட்ட கஷ்டங்களில் ஒன்றையாவது தீர்க்கமுடியாதவனாக நான் ஆகிவிட்டேனே. அந்த தாய்க்கு நமஸ்காரம்."*

இதேபோல்தான் பட்டினத்தாரும் தன் தாயின் சிதைக்கு தீமூட்டும்போது பாடினார்

***'முந்தித் தவம் இருந்து முந்நூறு நாள் சுமந்து***
***அந்தி பகலாய்ச் சிவனை ஆதரித்தே தொந்தி***
***சரியச் சுமந்து பெற்ற தாயார் தமக்கோ***
***எரியத் தழல் மூட்டுவேன்.'***

## "உபதேச பஞ்சகம்" (அல்லது) "ஸாதன பஞ்சகம்"

ஸ்ரீசங்கரர் முக்தி அடைவதற்கு முன்பு ரக்தாக்ஷி ஆண்டில் வைகாசி மாதத்தில் சுக்கிலபட்சம் ஏகாதசி தினத்தில் தன் நான்கு சிஷ்யர்களையும் கூட்டி வைத்து தனது உபதேசமாக ஐந்து ஸ்லோகங்களை

பாடினார் அதுதான் "உபதேச பஞ்சகம்" (அல்லது) "சாதனா பஞ்சகம்"

## திரிபுரஸுந்தரீ வேத பாதஸ்தவம்

காஞ்சி காமாட்க்ஷியின் முன் பாடிய துதி.

## பத்ரிநாத்

ஹிமாசலம் சென்ற ஸ்ரீசங்கரர் அங்கு நாராயண பர்வதத்தில் உள்ள பத்ரிநாராயணன் க்ஷேத்திரத்திற்குச் சென்றார். ஆனால் அங்கு **'பத்ரி நாராயண மூர்த்தி'** இல்லை. சாலிக்ராமத்தை வைத்து பூஜை செய்துக்கொண்டிருந்ததைக் கண்டார். சைனா கொள்ளையர்கள் வந்து மூர்த்தியை எடுத்து **அளகாநந்தா** ஆற்றில் எறிந்துவிட்டார்கள் என்று கூறினார்கள். ஸ்ரீசங்கரர் பத்ரிநாததேவனை துதி செய்து தானே அழகாநந்தா ஆற்றில் **'நாரதகுண்டம்'** என்ற இடத்தில் மூழ்கி பத்ரிநாராயண மூர்த்தியை வெளியே எடுத்துவந்து பிரதிஷ்டை செய்து பூஜையும் செய்தார்.

## பூரி ஜகந்நாதபுரி

பூரி ஜகந்நாதபுரிக்குச் சென்ற ஸ்ரீசங்கரர் அங்கும் ஜகந்நாத க்ஷேத்திரத்தில் விக்ரஹம் இல்லாமல் சாளக்ராம பூஜை நடப்பதைக் கண்டார். ஊர்மக்களைக் கேட்டதில் வெகுகாலத்திற்கு முன்பே விக்ரஹம் காணாமல் போய்விட்டதாகவும் அங்குள்ள **'சில்கா தீரத்தில்'** தேடியும் கிடைக்கவில்லை என்றார்கள். அதைக்கேட்ட ஸ்ரீசங்கரர் ஜகந்நாதரை தியானித்து

**'ஜகந் நாதாஷ்டகம்'** இயற்றி பாடினார். அதில் ஒவ்வொரு ஸ்லோகத்தின் முடிவிலும் **'ஜகந்நாத ஸ்வாமீ நயனபதகாமீ பவது மே' = 'ஜகந்நாத ஸ்வாமி என் கண்முன்னே தோன்றட்டுமே'** என்று வைத்துப்பாடினார். உடனே அவருடைய ஞான திருஷ்டியில் பார்த்து *'ஜகந்நாத விக்ரஹம் ஒரு ரத்தினப் பெட்டியில் வைத்து அந்த ஆலமரத்தின் அடியில் புதைத்து வைக்கப்பட்டுள்ளது'* என்று ஒரு ஆலமரத்தைச் சுட்டிக்காட்டினார். எல்லோரும் அங்கு சென்று தோண்டிப்பார்த்தபோது ஸ்ரீசங்கரர் கூறியதுபோல் ரத்தினப் பெட்டியும் அதன் உள்ளே ஜகந்நாதரின் விக்ரஹமும் இருப்பதையும் கண்டார்கள். அதன் பின் ஸ்ரீசங்கரர் முன் அந்த விக்ரஹம் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

## திருவிடைமருதூர்

ஸ்ரீசங்கரர் தஞ்சை மாவட்டத்தில் உள்ள மத்யார்ஜுனம் என்கிற திருவிடை மருதூர் வந்தபோது அங்கிருந்த சைவப் பண்டிதர்கள் ஸ்ரீசங்கரரின் 'நீங்கள் கூறும் அத்வைத்தத்தை எங்கள் சிவனே கூறினால்தான் ஏற்போம்' என்றார்கள். உடனே சங்கரர் அவர்களை ஸ்ரீமஹாலிங்கேஸ்வரர் முன் அழைத்துச் சென்று நிறுத்தியதும் ஒரு அசரீரி **"சத்யம் அத்வைதம்"** என்று கூறியதோடு லிங்கத்தினின்று ஒரு கை வெளியே வந்து சத்தியம் செய்வதுபோல் ஓங்கி நின்றது. கூடிநின்ற அனைவரும் ஆச்சர்யம் அடைந்து ஸ்ரீசங்கரரிடம் மன்னிப்பு கேட்டுக்கொண்டு அவரைத் தங்கள் குருவாக ஏற்றுக்கொண்டார்கள்.

## ஸ்ரீகுருவாயூர்

ஒரு ஸமயம் ஸ்ரீசங்கரர் காலடியிலிருந்து ச்ருங்கேரிக்கு குருவாயூர் வழியாகப் போய்க்கொண்டிருந்தார். அப்போது கோயிலில் **'பூதபலியும் சீவேலியும்'** நடந்துக்கொண்டிருந்தது. ஸ்ரீசங்கரர் அதை கவனிக்காமல் தம்முடைய யாத்திரையைத் தொடர்ந்தார். அப்போது எதிர்பாராத விதமாக ஸ்ரீசங்கரர் கால் இடறி யானையின் காலடியில் மயங்கி விழுந்துவிட்டார். எல்லோரும் செய்வதறியாது திகைத்தனர். சிறிது நேரத்தில் ஸ்ரீசங்கரர் மயக்கம் தெளிந்து எழுந்து தன் தவறை உணர்ந்து ஸ்ரீகுருவாயூரப்பனை நமஸ்கரித்து **'கோவிந்த அஷ்டகம்'** பாடினார். அதன்பிறகு கோயிலிலேயே 41 நாட்கள் இருந்து கோயிலின் பூஜை வழிபாடுகளை வகுத்துக்கொடுத்தார். இன்றும் ஸ்ரீகுருவாயூர் கோயிலில் ஸ்ரீஆதி சங்கரர் வகுத்த பூஜை முறைகள்தான் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

## ***ஐந்து ஸ்படிக லிங்கங்களும் அவற்றை ஸ்ரீசங்கரர் பிரதிஷ்டை செய்த இடங்களும்.***

கைலாய பர்வதத்திற்குச் சென்ற ஸ்ரீசங்கரர் பரமேஸ்வரனிடமிருந்து பெற்றுவந்த ஐந்து ஸ்படிக லிங்களையும் பூலோகத்தில் கீழ்க்கண்ட ஐந்து க்ஷேத்திரங்களில் பிரதிஷ்டைச் செய்தார்.

| | |
|---|---|
| **1. வரலிங்கம்** | நேபாளத்தில் உள்ள நீலகண்ட க்ஷேத்திரம் |
| **2. முக்திலிங்கம்** | கேதார்நாத்தில் உள்ள 'பசுபதி நாதர்' க்ஷேத்திரம் |
| **3.மோட்க்ஷலிங்கம்** | சிதம்பரத்தில் உள்ள நடராஜர் க்ஷேத்திரம் |
| **4. போக லிங்கம்** | சிருங்கேரியில் உள்ள சாரதா பீடம் |
| **5. யோக லிங்கம்** | காஞ்சிபுரத்தில் காமகோடி பீடம் (தம்முடைய பூஜைக்காக) |

## ஸ்ரீசங்கரர் 'ஸ்ரீசக்ரங்கள்' பிரதிஷ்டைச் செய்த ஸ்தலங்கள்.

| | |
|---|---|
| **1.மூகாம்பிகை** | **'ஸ்ரீ சக்ரம்'** அன்னை மூகாம்பிகையின் உக்ரகத்தை தனிப்பதற்காக. |
| **2.சிதம்பரம்** | **'அன்னாகர்ஷண யந்திரம்'** (பஞ்சாக்ஷர யந்திரம்) |
| **3.திருப்பதி திருமலை** | **'தனாகர்ஷணா யந்திரம்.'** (கேயிலில் இன்றும் கோடிக் கணக்காக பணம் குவியக் காரணம் இந்த யந்திரம்தான் என்பது நம்பிக்கை) |

**4.ஸ்ரீரங்கம்** 'ஜனாகர்ஷண யந்திரம்'

**5.மாங்காடு** 'அர்த்தமேரு ஸ்ரீசக்ரம்' ( அம்மனின் ருத்ரமும் மஞ்சாக்னி ஜ்வாலையின் உஷ்ணம் தணியவேண்டியும் பிரதிஷ்டை செய்யப்பட்டது)

## ஸ்ரீசங்கரர் நிறுவிய முக்கிய மடங்கள்

1. **ரிக்** வேதத்தைக் குறிக்கும் வகையில் கிழக்கு திக்கில் பூரியில் **'கோவர்த்தன மடம்'**
2. **யஜுர்** வேதத்தைக் குறிக்கும் வகையில் தெற்கு திக்கில் சிருங்கேர்யில் **'சிருங்கேரி சாரதா மடம்**
3. **சாம** வேதத்தைக் குறிக்கும் வகையில் மேற்கு திக்கில் துவாரகாவில் **'துவாரகா மடம்'**
4. **அதர்வண** வேதத்தைக் குறிக்கும் வகையில் வடக்கில் பத்ரிநாத்தில் **'ஜோதிர் மடம்'**
5. காஞ்சிபுரத்தில் **காஞ்சி காமகோடி மடம்.**

## ஸ்ரீசங்கரரின் நான்கு சிஷ்யர்களும் அவர்கள் சிஷ்யர்களாக ஆன விவரமும்.

நாரதரும் தேவர்களும் பரமேஸ்வரனிடம் முறையிட்டபோது பகவான் 'நானே நான்கு சிஷ்யர்களுடன் பூலோகத்தில் மனுஷ ஜென்மாவை மேற்கொண்டு வேண்டியததைச் செய்வேன்' என்றார்.

பகவான் மஹாவிஷ்ணு அவதாரம் எடுக்கும் போதெல்லாம் தேவர்களும் அவருடன் அவதாரம் எடுத்துள்ளார்கள். அதேபோல் ஸ்ரீசங்கரருக்கு மஹாவிஷ்ணுவும் ப்ரம்மாவும் வாயுவும் அக்னியும் நான்கு சிஷ்யர்களாக் அவதரித்தார்கள்.

## 1. முதல் சிஷ்யர் ஸ்ரீபத்மபாதாச்சார்யா

ஸ்ரீசங்கரர் காசியில் தங்கியிருந்தபோது ஒரு நாள் ஒரு இளைஞர் சங்கரரிடம் வந்து தான் சோழநாட்டிலிருந்து வருவதாகவும் தன் பெயர் 'சனந்தன்' என்று கூறி அவன் வாழ்க்கையில் பட்ட கஷ்டங்களை ஸ்ரீசங்கரரிடம் கூறினான். பிறகு *'உலகில் பிறக்கும் எல்லோருக்கும் விதியின் நியதிப்படித்தான் வாழ்க்கை அமைகிறது. நான் தங்களிடம் வந்துள்ளேன்'* என்று கூறி ஸ்ரீசங்கரரின் கால்களில் விழுந்து நமஸ்கரித்தான். ஸ்ரீசங்கரர் அவன் கூறியதை எல்லாம் தம்முடைய ஞானத்தால் பார்த்து தீர்மானித்து சந்நியாச நெறிகளின்படி அவனுக்கு சந்நியாசத்தை வழங்கி துறவியாக்கி தன்னுடைய முதல் சிஷ்யனாக ஏற்றுக்கொண்டார். அவனுடைய குரு பக்தி ஸ்ரீசங்கரருக்குத் தெரிந்திருந்தாலும் அதை உலகிற்கு காட்ட நினைத்தார் ஸ்ரீசங்கரர். ஒரு நாள் சனந்தன் கங்கையாற்றின் ஒரு கரையில் துணிகளைத் துவைத்துக்கொண்டிருந்தபோது அக்கரையில் உபதேசம் செய்துக்கொண்டிருந்த ஸ்ரீசங்கரர் **'ஸனந்தா இங்கே வா வா'** என்று அழைத்ததும் படகில்போய்த்தான் அக்கரையை அடையவேண்டும் என்பதையும் மறந்து

தண்ணீரில் ஓடிச்சென்று குருநாதரை அடைந்தான். உடனே ஸ்ரீசங்கரர் 'சனந்தா இவ்வளவு ஆழமான ஆற்றை எப்படி கடந்தாய்? என்று கேட்க 'தங்களை குருவாக பெற்ற எனக்கு பிறவிக்கடலே முழங்கால் அளவுதான் என்று என்னும்போது இந்த கங்கையின் ஆழம் எம்மாத்திரம் குருவே' என்று கூறினான். 'ஸனந்தா திரும்பிப்பார்' என்றார் ஸ்ரீசங்கரர். சனந்தன் திரும்பிப் பார்க்க தான் இருந்த கரையிலிருந்து தாமரை மலர்களால் ஒரு பாலமே அமைந்திருந்தது. 'சனந்தா உன்னுடைய குரு பக்தியைக் கண்டு உன்னைக் காப்பாற்றவே கங்கை தாமரை மலர்களால் உன்னுடைய பாதங்களைத் தாங்கினாள்' என்று கூறிய ஸ்ரீசங்கரர் பத்மங்களின் மீது ( தாமரை ) பாதங்களை வைத்து வந்ததால் சனந்தனுக்கு **'பத்மபாதர்'** என பெயர் சூட்டினார். பத்மபாதர் பகவான் மஹாவிஷ்ணுவின் அம்சம் என்று ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள் தம்முடைய **'அருள் உரை'** என்ற புத்தகத்தில் கூறியுள்ளார். பத்மபாதர் நரஸிம்ஹ உபாஸகர்.

ஸ்ரீசங்கரர் கிழக்கு திக்கில் நிறுவிய **'கோவர்த்தன மடத்திற்கு'** இவரை ஆசார்யராக நியமித்தார்.

## 2 <u>இரண்டாவது சிஷ்யர்</u>

### ஸ்ரீஸுரேஸ்வராச்சார்யா.

இவர் **'குமாரிலபட்டரின்'** சீடர். ஸ்ரீசங்கரர் பிரயாகை ( அலகாபாத் ) அடைந்தபோது **'துஷாக்னி பிரவேசம்'** செய்துக்கொண்டிருந்த குமாலிப்பட்டரை

காப்பாற்ற நினைத்து அதுமுடியாமல் போகவே அவருடைய வேண்டுகோளின் படி மகததேசத்தில் மாஹிஷ்மதி என்ற நகரத்தில் இருந்த **'மண்டனமிச்ரரை'** சந்திதார். 'மண்டனமிச்ரர்' ஒரு கிரஹஸ்தர். அவருடைய மனைவியின் பெயர் **'ஸரசவாணி'.** 'மண்டனமிச்ரர்' அத்வைத ஞான மார்க்கத்தை கேவலமாக கண்டித்து மீமாஸ்கராக இருந்தார். ஸ்ரீசங்கரர் இவருடன் நீண்ட நாட்கள் வாதம் செய்தார். கடைசியில் தோல்வி அடைந்த 'மண்டனமிச்ரர்' தம் தோல்வியை ஒப்புக்கொண்டு இல்லரத்தை விட்டு துறவியாகி தன் பெயரை 'ஸுரேச்வராசாரியார்' என்று மாற்றிக்கொண்டு ஸ்ரீசங்கரரின் சிஷ்யனாகிவிட்டார். இவர் ஸ்ரீசங்கரரைவிட வயதில் மூத்தவர். ஸ்ரீசங்கரர் இவரை தம்முடைய இரண்டாவது சிஷ்யராக ஏற்றுக்கொண்டு **சிருங்கேரி** மடத்திற்கு மடாதிபதியாக்கினார்.

**'ஸ்ரீஸுரேஸ்வராச்சார்யர்'** ப்ரம்மாவின் அம்சம். ப்ரம்மாவோடு அவதாரம் எடுத்த ஸரஸ்வதி தேவிதான் 'ஸுரேஸ்வரரின் மனைவி 'ஸரசவாணி '.

## <u>3.மூன்றாவது சிஷ்யர் :- 'ஸ்ரீஹஸ்தாமலகர்'</u>.

ஸ்ரீசங்கரர் மூகாம்பிகை ஷேத்திரத்திற்கு வந்தபோது **'சிவ விஹாரம்'** ( தற்போதய பெயர் **'ஸ்ரீவலி'** ) என்ற கிராமத்திலிருந்து ஒரு அந்தணர் தன்னுடைய பிள்ளையையும் அழைத்துக்கொண்டு ஸ்ரீசங்கரரிடம் வந்து *'மஹானே இவன் என்னுடைய பிள்ளை பிறந்ததிலிருந்து மந்தபுத்தியோடு வாழ்க்கையில்*

*எந்தவித பிடிமானமும் இல்லாமல் இருக்கிறான் அதற்கு காரணம் என்ன என்று தாங்கள் கூறவேண்டும்'* என்று கேட்டார். ஸ்ரீசங்கரர் அந்த குழந்தையைப் பார்த்து ' குழந்தாய் நீ யார்? உன்னுடைய பெயர் *என்ன?* நீ எங்கிருந்துவருகிறாய்? நீ ஏன் இப்படி இருக்கிறாய்? என்று கேட்டார். அதுவரையில் பேசாதிருந்த அந்த குழந்தை வாய் திறந்து ***' நான் மனிதன் அல்ல பிரம்மச்சாரி கிரஹஸ்தன் அல்ல நான் நிஜபோதஸ்வரூபம் எங்கும் பரவியுள்ள ஆத்மாவான ஒரே சத்யம்தான் நான்'*** என்று 13 ஸ்லோகங்களின் மூலம் பதில் சொன்னான். அதைக்கேட்ட ஸ்ரீசங்கரர் குழந்தையின் தந்தையிடம் ' இவன் தங்களிடம் இருக்கவேண்டியவன் அல்ல. இவனை எனக்குத் தந்துவிடும்' என்று கேட்டு குழந்தையைத் தன்னுடன் வைத்துக்கொண்டு அவன் அளித்த பதில்கள் உள்ளங்கை **நெல்லிக்கனி ( ஹஸ்தாமலகம்)** போல் இருந்ததால் அவனுக்கு **'ஹஸ்தாமலகர்'** என்று பெயர் சூட்டி தன்னுடைய மூன்றாவது சிஷ்யனாக ஆக்கிக்கொண்டார். பின்பு ஹஸ்தாமலகரை மேற்க திக்கில் ஸ்தாபித்த துவாரகா மடத்திற்கு மடாதிபதியாக்கினார். ஹஸ்தாமலகர் **'வாயு'** வின் அம்சம்.

## 4. நான்காவது சிஷ்யர் 'ஸ்ரீதோடகாசாரியர்'.

ஸ்ரீசங்கரருக்கு **'ஆனந்தகிரி' (கிரி)** என்ற பெயர்கொண்ட ஒரு சிஷ்யன் இருந்தான். அவன் உண்மையான குருபக்தியும் உண்மை மட்டுமே

பேசுபவனாகவும் குருவிடம் பேரன்பு கொண்டவனாகவும் இருந்தான். தன் குரு மற்ற சிஷ்யர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும்போது அதை பக்கத்திலிருந்து கேட்டுக்கொண்டு குருவிற்கு வேண்டிய எல்லா காரியங்களையும் செய்துக்கொடுத்துக்கொண்டிருந்தான். ஒரு நாள் மற்ற சிஷ்யர்கள் பாடம் கற்றுக்கொள்ள குருவின் முன் வந்து அமர்ந்திருந்தார்கள். அப்போது **'கிரி'** தன் குருவின் துணிகளைத் துவைத்துக் கொண்டிருந்தான். ஸ்ரீ சங்கரர் பாடம் ஆரம்பிக்காமல் கிரியின் வருகைக்காக காத்திருந்தார். இதைக் கண்ட மற்ற சிஷ்யர்கள் கிரி *'ஒரு மந்தபுத்தி உள்ளவன் அவனுக்கு பாடம் படிக்க என்ன தெரியும் ஆதலால் குரு பாடத்தை ஆரம்பிக்கலாமே'* என்றார்கள். அந்த நேரத்தில் 'கிரி' தன் குருவை கீழ்க்கண்டவாறு துதித்துக்கொண்டே ஓடி வந்தான்..............

**விதிதாகில சாஸ்த்ர ஸுதா ஜலதே**
**மஹிதோபநிஷத் கதிதார்த்த நிதே /**
**ஹ்ருதயே கலயே விமலம் சரணம்**
**பவ சங்கர தேசிக மே சரணம் //**

*ஹே ஜகத்குரு பாற்கடலைப்போன்றை சாஸ்த்ர கடலை கற்றுணர்ந்தவரே / உபநிஷத் என்னும் பெரும் பொக்கிஷத்தின் பொருளை உலகுக்கு உணர்த்தியவரே / என்றும் என் இதய கமலத்தில் வைத்து போற்றும் உமது விமலமான பாதங்களிடம் சரணடைகிறேன். நீரே அடைக்கலம் ஷ ஹே சங்கர தேசிகா.*

மற்ற சிஷ்யர்களுக்கு இப்போதுதான் கிரியின் பெருமை தெரிந்தது. கிரி பாடிய எட்டு ஸ்லோகங்களும் **'தோடகம்'** என்ற செய்யுள் விருத்தத்தில் இருந்ததால் ஸ்ரீசங்கரர் கிரிக்கு **'தோடகன்'** என்று பெயர் சூட்டி தன்னுடைய நான்காவது சிஷ்யனாக ஏற்றுக்கொண்டார். கிரி பாடிய ஸ்தோத்ரம் **'தோடகாஷ்டகம்'** என்று புகழ் பெற்றது. பின் ஸ்ரீசங்கரர் தோடகரை வடக்கு திக்கில் ஸ்தாபித **'ஜோதிர்'** மடத்திற்கு மடாதிபதியாக்கினார். தோடகர் **'அக்னி'** யின் அம்சம்.

ஸ்ரீசங்கரரின் நான்கு சிஷ்யர்களில் **ஸ்ரீபத்மபாதர் ஸ்ரீஹஸ்தாமலகர் ஸ்ரீதோடகர்** ஆகிய மூவரும் ஸ்ரீசங்கரர் போலவே ப்ரம்மச்சர்யத்திலிருந்து நேரிடையாக சந்நியாசம் பெற்றவர்கள். ஆனால் **ஸ்ரீஸுரேச்வரர்** மட்டும் கிரஹஸ்தராக வாழ்ந்து பிறகு சந்நியாசம் வாங்கியவர். **ப்ரம்மாவும் அவருடைய மனைவி சரஸ்வதியுமே ' ஸ்ரீஸுரேச்வராகவும்' 'ஸரசவாணி'யாகவும்** அவதரித்தார்கள். பகவான் சுப்பிரமண்யர் தான் **'குமாரில பட்டர்'.** இவர் ஸ்ரீசங்கரருக்கு முன்பாகவே அவதரித்துவிட்டார்.

## ஸ்ரீஆதி சங்கரரின் அத்வைதம்

**'த்வைதம்'** என்றால் **'இரண்டு'** என்று பொருள். **'அத்வைதம்'** என்றால் இரண்டல்ல ஒன்றுதான் என்று பொருள். அதாவது **'ஜீவன்'** வேறு **'ப்ரஹ்மம்'** வேறு என்பது இல்லை. இரண்டுமே ஒன்றுதான். **'ந த்வைதம் யத்ரதத் அத்வைதம்'** இரண்டற்ற

ஒன்றுதான். நாம் இருட்டில் சாலையில் போய்க்கொண்டிருக்கும்போது வழியில் நீண்டு வளை வளைவாக ஒன்று தெரிகிறது. உடனே அதை நாம் பாம்பு என்று நினைத்த பயப்படுவோம். ஆனால் பிறகுதான் தெரிகிறது அது கயிறு என்று. கயிறு மாயையினால் பாம்பாக தெரிகிறது. பிறகு கயிறுதான் பாம்பாகத் தெரிந்தது என்று உணர ஞானம் தேவைப்பட்டது. **`தெய்வத்துக்குள் தான் தனக்குள் தெய்வம்`** பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்று எனக்கண்டவர்தான் ஸ்ரீ ஆதி சங்கரர்.

ஸ்ரீசங்கரர் தம்முடைய ஆறாவது வயதில் தன் தாயின் ஆசியோடு ஸந்நியாசம் ஏற்று குருவைத்தேடிச் சென்று அவரிடம் ஆசியும் ஞானோபதேசமும் பெற்று இமயமலை முதல் குமரி வரையிலும் நான்கு முறை பாரததேசம் முழுவதும் நடந்தே பயணம் செய்தார். அவர் தம்முடைய அவதார நோக்கத்தை நிறைவேற்ற எல்லா இடங்களிலும் பல ஜைன பௌத்த குருமார்களையும் பல படித்த பண்டிதர்களையும் சந்தித்து அவர்களுடன் வாதம் செய்து வென்று அவர்களைத் தம் பக்கம் ஈர்த்து **'அத்வைத மதத்தை'** நிலைநாட்டினார். மாபெரும் அழிவிலிருந்து இந்து மதத்தைக்காப்பாற்றினார். அவரது பயணத்தில் எத்தனையோ சோதனைகள் தடைகள். அவரை அழிக்கவும் முயன்றார்கள். ஆனால் அவர் எல்லாவற்றையும் எதிர்கொண்டு வெற்றி அடைந்தார். முன்பு பல வகையில் இருந்த காளி, விஷ்ணு, சிவன்,

கணபதி, சூரியன், முதலிய தெய்வ வழிபாட்டை முறைப் படுத்தி ஆறு சமயங்களாக வகுத்தார். அதனால் **'ஷண்மத ஸ்தாபனாச்சார்யர்'** என்று போற்றப்பட்டார். பாரதத்தில் உள்ள எல்லா முக்கிய நதிகளில் நீராடி கோயில்களுக்கும் விஜயம் செய்து அநேக ஸ்லோகங்களையும் நூல்களையும் எழுதினார். ஸ்ரீசங்கரரைப் பற்றி ஒரே ஸ்லோகத்தில் சொல்லுவார்கள்.

***'அஷ்டவர்ஷ சதுர் வேதி த்வாதசே ஸர்வ சாஸ்த்ர வித் ஷோடசே க்ருதவான்ன பாஷ்யம் ஸ்தவாத்ரிம் சே முனி ரப்யதாத்'*** என்று. அதாவது எட்டு வயதுக்குள் ஸகல வேதங்களையும் படித்து முடித்தவர். 12 வயதுக்குள் ஸகல ஸாஸ்த்ரங்களையும் படித்து முடித்தவர். 16 வயதுக்குள் எல்லா பாஷ்ய க்ரந்தங்கள் லகு பாஷ்யங்கள் லக ப்ரகரணங்கள் ஆகியவற்றை ரசனை செய்தவர். 32 வயதிற்குள் திக் விஜயத்தில் தன் அவதார நோக்கத்தை நிறைவேற்றியவர்.

ஸ்ரீ ஆதிசங்கருடைய ஆதாரபூர்வமான வாழ்க்கை வரலாறு என்று எதுவும் கிடையாது. அவர் மறைந்து சில நூற்றாண்டுகள் கழித்துதான் அவருடைய வரலாற்றை பலரும் எழுதினார்கள். அவற்றுக்கு எல்லாம் **'சங்கர திக் விஜயம்'** என்று பொதுவான பெயர். சங்கரர் முக்தி அடைந்தது **கேதார்நாத்** க்ஷேத்ரம் என்றும் கேரளம் **திருச்சூர்** வ்ருஷாசல க்ஷேத்ரம் என்றும் **காஞ்சி** காமாக்ஷி க்ஷேத்திரம் என்றும்

பலவிதமான மாற்றுக்கருத்துக்கள் இருக்கின்றன. ஆனால் அவர் தம்முடைய 32வது வயதில் தம்முடைய அவதார காரியம் முடிந்து முக்தி அடைந்தார் என்பதில் எல்லோருடைய கருத்தும் ஒன்றுதான். அவர் எங்கு முக்தி அடைந்தார் என்பது நமக்கு முக்கியமல்ல. பகவான் ஒரு நல்ல காரியத்திற்கு அவதாரம் எடுத்தார் அவதார காலம் முடிந்ததும் முக்தி அடைந்தார். வாழ்ந்த காலத்தில் அவர் நமக்கு விட்டுச் சென்ற உபதேசங்கள் என்ன? இந்த 21வது நூற்றாண்டுக்கு மட்டுமல்லாமல் இனி எத்தனை நூற்றாண்டுகள் ஆனாலும் அவருடைய உபதேசங்கள் உபயோகமானதுதான். அந்த அளவிற்கு என்றைக்கும் இருக்கும்படியாக பக்தியாகவும் ஞானமாகவும் ஏராளமாக எழுதிவைத்துவிட்டுப் போயிருக்கிறார். அவை எல்லாவற்றிலும் மிகவும் முக்கியமாவை **'பஜகோவிந்தம்' 'மாத்ருகா பஞ்சகம்' மற்றும் 'ப்ரச்னோத்தர ரத்னமாலிகா'** ஆகியவை. **'பஜகோவிந்தம்'** மிகவும் புகழ் பெற்றது. காரணம் அதில் நாம் ஒவ்வொருவரும். வாழ்க்கையில் கடைபிடிக்கவேண்டிய உயர்ந்த தத்துவக் கருத்துக்களை மிகத் தெளிவாக கூறியுள்ளார். **'மாத்ரு பஞ்சகம்'** தாயின் பாசத்தை உணர்த்தும் நூல். **'ப்ரச்னோத்தர ரத்னமாலிகா'** கேள்வி பதில் என்கிறமாதிரியான ஒரு **க்ரந்தம்.** ஒவ்வொரு கேள்விக்கும் சுருக்கமான பதில்கள் கூறியுள்ளார்.

அதில் ஒரு கேள்வி

**ப்ரத்யக்ஷ தேவதாகா ? மாதா /**
**பூஜ்யோ குருஸ்ச்சக ? தாத /**

கேள்வி கண்கண்ட தேவதை யார் ?
ஸ்ரீசங்கரரின் பதில் **தாய்**

கேள்வி பூசனைக்கு உரிய குரு யார்?
ஸ்ரீசங்கரரின் பதில் **தந்தை**

ஸ்ரீ ஆதி சங்கரர் தாய் தந்தையரை எவ்வளவு உயர்ந்த ஸ்தானத்தில் வைத்திருந்தார் என்பது அவரின் இந்த பதிலிலிருந்து தெரிகிறது.

ஸ்ரீராமர் வாழ்ந்து காட்டியதுபோல் வாழவேண்டும். ஸ்ரீகிருஷ்ணர் கீதையில் கூறியதுபோல் நடக்கவேண்டும் என்று சொல்லுவார்கள். அதேபோல் நாம் ஒவ்வொருவரும் ஸ்ரீஆதி சங்கரரின் அவதார தினமான வைசாக சுக்ல பஞ்சமி நாளை வருடாவருடம் கொண்டாடி அவருடைய ஸ்தோத்ரங்களை தினமும் பாராயணம் செய்து அவர் க்ரந்தங்களில் கூறியுள்ள உயர்ந்த தத்துவங்களின்படி நம்முடைய வாழ்க்கையில் வாழ்ந்தால் நமக்கு பக்தியும் ஞானமும் வரும். அப்படி வாழ்ந்து காட்டி ஸ்ரீஆதி சங்கர பகவத் பாதாள் அவர்களுக்கு நம்முடைய நன்றியை தெரிவிப்போமாக.

**ஜய ஜய சங்கர ஹர ஹர சங்கர**

